உ

முருகக்கடவுளிணை.

# வண்ணத்தியல்பும்

உதாரண

## வண்ணங்களுந் திருப்புகழ்களும்.

---

இவை

முருகதாசசுவாமிகளென்றுந்
திருப்புகழ்ச்சுவாமிகளென்றும்
விளங்குகின்ற,
திருநெல்வேலித்

## தண்டபாணி சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியன.

---

மேற்படி சுவாமிகள் உத்தரவின்பேரில்
முன்னச்சிட்டவர்களின்
சம்மதப்படி,

தஞ்சைமாநகரம் ஆயுள்வேதபண்டிதர்
வையாபுரிபிள்ளையவர்கள் குமாரராகிய
ம-ா-ா-ஸ்ரீ, சண்முகம்பிள்ளை யவர்களால்
ஸ்ரீநிலய அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன.
இரண்டாம் பதிப்பு.—ரிஜிஸ்தர்.
பிரமாதிஞு கார்த்திகைமீ

முருகக்கடவுடுணை.

# வண்ணத்தியல்புநூலின்

# பாயிரம்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

கொற்றவைவேற் செங்கையுள்ள கோமானே பல்லோருஞ்
சொற்ற முதுநூற் றொகுப்பாய—நற்றமிழ்ச்சீர்
வண்ணத்தியல்பை வகுத்துரைக்க நாயடியே
னெண்ணத்தி னீவந் திரு. (க)

அதிகாரியிலக்கணம். கட்டளைக்கலித்துறை.

சந்தன மால்வரைக் கோன்சொன்ன நூற்றுணைச் சார்புடையார், செந்தமிழ்ப் பாடலின் சீருணர்ந் துண்மைச்செயலைநம்பிச், சுந்தரச்சண்முகப்பெம்மானைப்போற்றுமெய்த்தொண்டர்மட்டி, லெந்தமக்கோர்தஞ்ச மாகியவண்ணத் தியல்பு நன்றே. (உ)

நூற்றுணைஎன்பது-சிற்றகத்தியம்-பேரகத்தியம். சார்புடையார் பாடலெனக்கூட்டுக.

கற்றோர்தன்மை. கலிப்பா.

ஆயிரங்காலமகங்குவிந்துகற்றாலும்
பாயிரமுந்தீர்வரியபன்னூதமிழ்த்தொன்னூல்கண்

மாயிருஞ்சிர்தந்தருளும்வண்ணத்தியல்புமுற்றும்
போயிருந்தநெஞ்சகத்தோர்புந்தியிடத்துள்ளனவே. (௩)

அனுமானக்குறிப்பு.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

விமலதேசிகனருட்பேறில்லாதார்தமிழ்ச்சுவைத்தேன் விருப்
பந்தோரார், சமணர்நூலுரித்துடையாரனையவர்க்கெல்லாமிக
லாந் தந்தோர்க்கஞ்சு, மெமதுநாரகமானசூத்திரநூறுடைய
வண்ணத்தியல்பின்சீர்கண், டமரர்சேகரப்பனுவலாகுமென்
பொர்மூன்று சங்கத்தவர்தாமன்றே. (௪)

அவையடக்கம். கலிவிருத்தம்.

கந்தவேளருட்கட்புலமீந்ததா
மிந்தவண்ணத்தியல்பொருநூற்றையுஞ்
செந்தமிழ்ப்புலமைத்திறற்சிருளார்
மைந்தர்காளும்வழுத்துவதுண்மையே. (௫)

நூற்காரணமும் பெயரும்பயனும்.

நேரிசையாசிரியப்பா.

எழுத்துச்சொற்பொரு ளியாப்பணி யிவற்றை
வழுத்து மாண்புடை வல்லோ ரியாருந்
தொகுத்துக் கூறலிற் றுவக்குறும் பலர்க்கும்
வகுத்துக் காட்டென வடிவேற் செவ்வே
ளன்பர் கூட்ட மகலாக் குருபரன்

றன்பதக் கமலந் தனவா நெஞ்சகத்
துள்ளிருந் தொலிக்கு முறைதேர் சிறியேன்
வெள்ளிய வுணர்வால் விதிக்கு நூற்பெயர்
வண்ணத் தியல்பாம் வளர்தமிழ்ப் புலவர்க்
கெண்ணமுற் றுதவ லிதன்பய னுமே. (௬)

## ஆக்கியோன்பேற்றம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவண்ணவிருத்தம்.

மெய்த்தவர்க்கரசின்வெண்மைக்குருளை
விட்புலத்ததிபன்வின்மற்றலைவ
னுத்தமக்கொலைஞன்வண்மைப்பரவ
னைப்பில்பொற்பலகைமின்னப்பகரும்
வித்தகப்புனிதன்விண்ணிற்புகமெய்
விட்டெழிற்கிளியதென்னத்திகழ்மன்
முத்தமிழ்ப்புலவன்வண்ணத்தியல்பு
மொய்த்தருட்கவிஞர்நன்னப்பெறுமே. (௭)

## நூன்மாட்சி.

நேரிசைவெண்பா.

குன்றைப் பிளந்தெறியுங் கொற்றவைவேற் கோனறிய
ன்றைக்கருதிநிற்கு நாவலவர்க்-கென்றைக்கு
மாளாப்புகழ்கொடுக்கும் வண்ணத் தியல்பெனுநூற்
கேளாச் செவியனைத்துங் கீழ் (௮)

நூற்சிறப்பிடம். கட்டளைக்கலித்துறை.

பல்லோர்க்குமின்பங் கொடுத்துங்கெடாத பருவமுற்று, நல்லோர்க்குநன்மை தரும்புலவோர்சந்த நற்றமிழ்ச்சீர்ச், சொல்லோர்க்குத்நாயக மாகிநெல்வேலியிற் றொல்லுல கோ, செல்லோர்க்கும்வன்மை தரத்தோன்றும்வண்ணத் தியல்புயர்வே. (க)

தமிழ்ச்சீர்ச்சொல்லோர்க்கு-என்பதற்குத் தமிழ்ப்பாடல்களைச் செப்பித்தச்சொல்லுஞ் சொல்லையுடையவர்களுக்கு-எனப்பொருள் கொள்க.

உற்று - ஆகி - தரத்தோன்று மெனக்கூட்டுக.

காலமுமரங்கு மேற்றேருரும். நிலைமண்டிலவாசிரியப்பா.

ஐந்திறம் பொலிவ வாயமுத் தமிழ்க்கு
மணித்தே யாகி யவிர்நலம் புனைதரு
வண்ணத் தியல்பு நூல் வாரியிற் பொருளைப்
புனலிற் கனலிற் புக்குள பன்னூற்
பகுதி தோன்றுமுற் பரங்கிரிக் கடவு
ளவையகத் தேறி யளப்பருங் கோடி
வானவில் லியங்க மற்பொரு திரைநீர்ப்
பெருங்கட லுடீஇய பெய்வளை தலைவயி
னொளிதரப் புரிந்த தொள்ளிய செங்கோல்.
வழுதிநாட் டருந்தமிழ் வாணர்
நன்னலந்தேறு நலத்தோர் தவமே. (உ)

முற்றிற்று.



உ

முருகக்கடவுடுணை.

# வண்ணத்தியல்பு.



நூல்

## முதலாவதுதொகையிலக்கணம்.

உயிர்வகை யீராறெற்றீரொன்பா,னிவற்றின்புணர்ச்சி யிரு நூற்றீரொட், டாய்தமொன்றிவ ணுயநால்வகை, யெழுத் தும்பல்வகையெதுகைச்சொல்லும், பன்னரும்பொருளும் பழிப்பிலியாப்பும், வாய்பாட்டணியும் வழூவறவுணர்ந்தோ, ரேவலின்முயல்வோரொழிற்றவ நோற்போர், முருகவேளே முதலெனத்தெளிந்தோர், மலயமால்வரைவந்தனம்புரிவோ, ரனையவர்தமக்கே யமுக்கிலாதமைந்து, குலவுசீர்வண்ணங் குணிக்கிலெண்வகைத்தே. (க)

அருந்தமிழ்ச்சந்தத்தையுமெளவு, மீற்றிற்குறளாயிடையினு முதலினுங், குறிலொடொற்றெனவுங்குலா அய்ச்சிறிது, நெ டிலெனவின்றி நிகழுமன்றே. (உ)

இடையினத்தொற்றேடுறமூமாய்தமே. (௩)

## இரண்டாவதுவகையிலக்கணம்.

தத்தவுந்தாத்தவுந்தந்தவுந்தாந்தவுந், தனவுந்தானவுந்தன்ன வுந்தய்யவுந், தத்தாவென்பதினீடலுமடங்கு, மெண்வகைச்

சந்தமென்பார்பெரியோர். (௪)

தத்தாவென்பதின் - என்பதற்கு-தத்தாவென்றுஞ் சந்தத்தைப் போலவெனப்பொருள் கொள்க.

அளவிற்கெண்வகைத்தாகியவண்ணப், புணர்ப்பிற்றேன்றிப் பொலிவவாய, குழிப்பின்றெகைக்குக்கோடியுஞ்சிறிதே. (௫)

வண்ணக்குழிப்பால்வழங்குஞ்செய்யுள், வாதித்திகலியவன் டமிழ்ப்புலவர், தம்முயர்வொளிர்வான் றக்கோர்மாட்டுப், பாடலுமுழுதுணர் பண்ணவனருட்பே, றெய்தப்பகராலுமி ழுக்கிலாவழக்கே. (௬)

வண்ணத்தளவில்வடமொழிமருஉச்சொற், புல்லினுமதுரப் பொலிவுகுன்றலுங், குழிப்புச்சிதைவுங் கொடுந்தமிழ்ப்பு ணர்ப்பு, மளபெடைச்சேர்க்கையு மாகாவன்றே. (எ)

வடமொழி - என்பது - இந்திரனென்பதை - இந்த்ரனென்று ம்,- திரிசூலி - என்பதை - த்ரிசூலி - யென்றும், பிரகிருதி என்பதை - ப்ரக்ருதியென்றுங்கொள்வதுபோல்வன.

மருஉச்சொல் - என்பது - எனடாஎன்பதை- எண்டாவென்று ம், வருகிறான் போகிறானென்பவற்றை - வாரான் - போரானென் றும் - இலக்கணஞ்சிதைந்து வழங்குவன.

கொடுந்தமிழென்பது - அன்னியபாஷைபோற் கருகிய சொற் கள்.

### தத்தச்சந்தம்.

இருவகைக்குழிலினும் வல்லினத்தொற்றே,டவ்வுயிர்மெய்க் குழிலொன்றிற்றத்தவே. (அ)

குறிலொடுவல்லொற் றவ்வுயிர்மெய்க்குறி, லிசைந்துமற்றிரு வகையொற்றென்றடுப்பினுந், தத்தவாமெனச் சாற்றுதலி யல்பே. (௯)

குறிலோடிடையினத்தொற்றும்வல்லொற்று, மவ்வினத்து யிர்மெய்க்குறிலுந்தத்தவே. (௰)

குறிலுடனிடையினமெய்யும்வல்லின, மெய்யுமவ்வுயிர்மெ ய்க்குறிலொன்று,மெல்லினத்திடையினத் தொற்றினிலொன் றுந், தத்தவாமெனச்சாற்றுவர்புலவோர். (௰௧)

பத்தியென்பது மொற்றருஞ்சிட்டனு, நெய்த்தென்றுணைப் பதுமெய்ச்சொலுங்கர்த்தனுந், தத்தவென்றியங்குஞ் சந்தத் துதாரணம். (௰௨)

தத்தாச்சந்தம்.

குறிலொடுவல்லினத்தொற்றிசைந்தவ்வினத்,துயிர்மெய்நெடி ல்வரிற் றத்தாவாகுமே. (௰௩)

குறிலொடுவல்லொற்றவ்வுயிர்மெய்நெடிற்,புணர்ப்பின்மற்றி ருவகையொற்றென்றடுப்பினுந், தத்தாவென்றேசாற்றுவர் பெரியோர். (௰௪)

குற்றெழுத்ததன்பி னிடையினத்தொற்றும், வல்லினமெய்யு மவ்வினத்துயிர்மெய், நெடிலுஞ்சேரினுந் தத்தாவாகுமே. ()

எவ்வகைக்குறிலொடு மிடையினத்தொற்றும், வல்லினத் தொற்றேடுயிர்மெய்நெடிலு, மிடையினமெல்லினத்தொற்றி

லொன்றுந், தத்தாவென்றே சாற்றுநல்வழக்கே. (௰௬)

அத்தாவென்பதுங் கற்றோனென்பதுந், தொட்டானென்பதும் பொய்க்கோவென்பது, நெய்க்கோலென்பது மெய்க்கோனென்பதுந்,தத்தாவென்னுஞ்சந்தத்துதாரணம் (௰௭)

## தாத்தச்சந்தம்.

நெடிலுடன்வல்லினத் தொற்றோடுயிர்மெய்க், குறில்வரிற்சந்தந்தாத்தவாகுமே. (௰௮)

நெடிலும்வல்லினத் தொற்றுமவ்வுயிர்மெய்க், குறிலுமற்றிருவகை யொற்றிலொன்றுஞ், சாரினுஞ்சந்தந் தாத்தவாகுமே. (௰௯)

நெடிலோடிடையின மெய்யும்வல்லொற்றோ, டுயிர்மெய்க்குறிலுமொன்றினுந்தாத்தவே. (௨௰)

நெட்டெழுத்திடையினத் தொற்றுவல்லினமெய், யவ்வினத்துயிர்மெய்க் குறின்மற்றிருவகை, மெய்யிலொன்றிவற்றின் விளக்கமுந்தாத்தவே. (௨௧)

காற்றும்பாட்டருங்கூத்தனும்பார்ப்புந், தூர்த்தனுங்காழ்த்தலுந்தாத்தவினுதாரணம். (௨௨)

## தாத்தாச்சந்தம்.

நெடிலுடன்வல்லினத் தொற்றுமவ்வினத், துயிர்மெய்நெடிலுந்தாத்தாவாகுமே. (௨௩)

நெடிலும்வல்லொற்றுமவ்வினத்துயிர்மெய்,நீட்சியுமற்றிருவ
கைத்தாமெய்யினி, லொன்றும்புணர்தலுந்தாத்தாவாகுமே()

நெடிலுடனிடையினமெய்யும்வல்லொற்று, மவ்வினத்துயிர்
மெய் நீட்சியும்புணர்ந்த,பதமுந்தாத்தாவென்றிடப்படுமே.()

நீடலுமிடையினத் தொற்றும்வல்லின, மெய்யோடுயிர்மெய்
நெடிலுமற்றிருவகை, யொற்றிலொன்றுந்தாத்தாவாகுமே.()

சாத்தாவாற்றூர்மாற்றான்வேய்ப்பூ, வாய்த்தோர்சீர்க்கோனெ
னுமுவிரண்டுந், தாத்தாவென்னுஞ்சந்தத்துதாரணம். (உஎ)

தந்தச்சந்தம்.

குறிலுமெல்லினத்தொற்றும்வல்லினத், துயிர்மெய்க்குறிலு
மொன்றிடிற்றந்தவே. (உஅ)

குறளுமெல்லினமெய்யும்வல்லுயிர்மெய்க், குறிலுமற்றிருவ
கை யொற்றிலொன்றுந், தந்தவாமெனச் சாற்றுதன்முறை
யே. (உகூ)

குற்றெழுத்திடையினத்தொற்றுமெல்லினமெய், வல்லினத்து
யிர்மெய்க்குறிலுந்தந்தவே. (௩௰)

குறிலோடிடையினமெய்யுமெல்லொற்றும், வல்லினத்துயிர்
மெய்க்குறளுமற்றிருவகை, யொற்றிலொன்றுஞ்சேரினுந்தந்
தவே. (௩௧)

மஞ்சுங்கொண்கருங்கந்தனுமொய்ம்பு,மொய்ம்பருமொய்ம்ப
னுந்தந்தவென்றேதுஞ், சந்தத்துதாரணமாமெனத் தகுமே.

### தந்தாச்சந்தம்.

குற்றெழுத்தோடுமெல்லினமெய்யும், வல்லினத்துயிர் மெய் நெடிலுஞ்சேரிற், றந்தாவென்பதுதண்டமிழ்வழக்கே. (௩௩)

குறிலுமெல்லினத்தொற்றும்வல்லுயிர்மெய், நெடிலுமற்றிரு வகையொற்றிலொன்றுஞ், சேரினுந்தந்தாவென்பது சிறப் பே. (௩௪)

குறளொடிடையினமெய்யுமெல்லொற்றும், வல்லினத்துயிர் மெய்நீட்சியும்புணரிற், றந்தாவாமெனச் சாற்றுதன்முறை யே. (௩௫)

குறிலுடனிடையினத்தொற்றுமெல்லின, மெய்யும் வல்லினத் துயிர்மெய்நெடிலு, மற்றிருவகைத்தா மொற்றினத்தொன் றுஞ், சாரினுந்தந்தாவென்பதுதானே. (௩௬)

அந்தோவென்பதுந்தங்காரென்பதும், வந்தேனென்பதுமொ ய்ம்பாவென்பது, மொய்ம்போரென்பது மொய்ம்போனென் பதுந், தந்தாவென்னுஞ் சந்தத்துதாரணம். (௩௭)

### தாந்தச்சந்தம்.

நெடிலொடுமெல்லினத்தொற்றும்வல்லினத், துயிர்மெய்க் குறளுமொன்றிடிற்றாந்தவே. (௩௮)

நெட்டெழுத்தோடு மெல்லினத்தொற்றும், வல்லினத்துயிர் மெய்க்குறிலுமற்றிருவகை, யொற்றினத்தொன்றுஞ்சேரிற் றாந்தவே. (௩௯)

நெடிலோடிடையினத்தொற்றுமெல்லினத்து, மெய்யும் வல்லினத்துயிர்மெய்க்குறிலும், புணரிற்றூந்தவென்றுரைப்பார் புலவோர். (௪௰)

நீட்சியுமிடையின மெய்யுமெல்லொற்றும், வல்லினத்துயிர்மெய்க்குறளுமற்றிருவகை, யொற்றிலொன்றும் புணரினுந் தாந்தவே. (௪௧)

வேந்தும் வேந்தரும் பாங்கனும் பாய்ந்துஞ், சார்ங்கருஞ் சார்ங்கமுந்தாந்தச்சந்தத், துதாரணமாமென் றுரைப்பார்பெரியோர். (௪௨)

தாந்தாச்சந்தம்.

நெடிலொடுமெல்லினத்தொற்றும்வல்லினத், துயிர் மெய்நீட்சியுந்தாந்தாவாகுமே. (௪௩)

நீடனுமெல்லினமெய்யும்வல்லுயிர்மெய், நெடிலுமற்றிருவகையொற்றினத்தொன்றுந், தாந்தாவாமெனச் சாற்றுதலியல்பே. (௪௪)

நெட்டெழுத்திடையினத்தொற்றுமெல்லினமெய், வல்லினத்துயிர்மெய்நெடிலுந்தாந்தா, வாமெனப்பகர்வதருந்தமிழ்வழக்கே. (௪௫)

நெடிலோடிடையின மெய்யுமெல்லொற்றும், வல்லினத்துயிர்மெய்நீட்சியுமேனைய, வொற்றினத் தொன்றுந்தாந்தாவாகுமே. (௪௬)

சேந்தாவென்பதும் வாங்காவொன்பது, நான்று னென்பது நேர்ந்தோவென்பதுஞ், சார்ந்தோவொன்பது மாய்ந்தானென் பதுந், தாந்தாவென்னுஞ்சந்தத்துதாரணம். (௪௭)

தனச்சந்தம்.

குறிலிரண்டிசையிற்றனவெனப்படுமே. (௪௮)

குற்றெழுத்திரண்டு மெல்லினத்திடையினத், தொற்றெழுத் தொன்றுந்தனவெனப்படுமே. (௪௯)

குருவுந்தவருஞ்சுதனுந்தனவென், றேதுஞ்சந்தத் துதாரண மாமே. (௫௰)

தனச்சந்தம்.

குறினெடிப்புணரிற்றனவெனப்படுமே. (௫௧)

குறிலொடு நெடிலுற்றிடையினமெல்லினத், தொற்றென்றடு ப்பினுந்தனவெனப்படுமே. (௫௨)

குகாவென்றுரைப்பதுஞ்சிறாவொன்றுரைப்பதுங், கவானென் றுரைப்பதுந்த னுவெனுஞ் சந்தத்,துதாரணமாமென்றுரைப் பார்பெரியோர். (௫௩)

தானச்சந்தம்.

நீட்சியுங்குறிலுந்தானவாகுமே. (௫௪)

நெடிலுங்குறிலு மிடையினமெல்லினத், தொற்றெனலொன் றுந்தானச்சந்தமே. (௫௫)

நெடிலோடிடையின மெய்யுங்குறிலுந், தானவாமெனச்சா ற்றுதன்முறையே. (௫௬)

நெடிலுடனிடையெனவொற்றுங்குறிலும், வல்லினந்தவிரிரு வகைத்தாமெய்களி, லொன்றும்புணரினுந்தானவாகுமே. ()

நெடிலுமெல்லினத் தொற்றுமவ்வினத்தோ, டிடையினமெ ன்னுமிவற்றோருயிர்மெய்க், குறிலுஞ்சேர்ந்து குலவினுந்தா னவே. (ருஅ)

நீடலுமெல்லினமெய்யுமவ்வினத்தோ,டிடையினத்தோருயிர் மெய்க்குறிலெழுத்துங், கூறினத்தொற்றினி லொன்றுந்தா னவே. (ருகூ)

காதுஞ்சூதரும்பாதமுங்கேள்வியுஞ், சார்கணுங்கூர்முனு மா ன்மியுந்தேன்வியு, மாண்மனுங்கூன்வினு மான்மருமாண்வி னுந், தானச்சந்தத்துதாரணமாமே. (கூ0)

தானச்சந்தம்.

இணைநெடிற்றானவென்றிடப்படுமே. (கூக)

நெடிலிணைந்திடையினமெல்லினத்தொற்றென், றடுப்பினுந் தானவாமெனல்வழக்கே. (கூஉ)

நீட்சியுமிடையினத்தொற்றுநீடலுந், தானவென்றே சாற்று வர்பெரியோர். (கூ௩)

இடையினத்தொற்றி னிருபாலிருநெடிற், புணர்ப்பாயிற்றிற் புகலினமெல்லினத், தொற்றென்றடுப்பினுந்தானவாகுமே()

நெடிலுமெல்லொற்று மெல்லினத்திடையினத், துயிர்மெய் நீட்சியுந்தானவாகுமே. (கூரு)

நெடிலொடுமெல்லொற்றுவல்லினத்திடையினத், துயிர்மெய்நீட்சியிலொன்றுவல்லீரினத், தொற்றென்றனோயினுந் தானுவென்பதே. (௬௬)

தாதாவென்பதும்போகாவொன்பது, மேவானென்பது மோர்பூவென்பதுங், கூர்வேலென்பதுஞ்சேர்மானென்பதுங், கேண்மோவென்பதுமான்வாவென்பது, மாண்மானென்பதுங்கூன்வாளென்பதும், வான்மேலென்பதுந் தேன்வீணென்பதுந், தானுச்சந்தத்து தாரணமாமே. (௬௭)

தன்னச்சந்தம்.

குறிலொடுமெல்லொற்றுவல்லினத்திடையினத், தோருயிர்மெய்க்குறிற்சேரிற்றன்னவே. (௬௮)

குறளொடுமெல்லினத் தொற்றுமவ்வினத்தோ, டிடையினத்துயிர்மெய்க்குறிலெழுத்தொன்று, மவற்றோடொற்றும் புணரினுந்தன்னவே. (௬௯)

கன்னியென்பதுமென்வியென்பது, மண்ணனென்பதும்பொன்விலென்பது, முன்னவொன்பதுமென்வென்னென்பதுந், தன்னச்சந்தத் துதாரணமாமே. (௭௰)

தன்னுச்சந்தம்.

குறளொடுமெல்லொற்றுவல்லினத்திடையினச், துயிர்மெய்நெடிலொன்றுறிற்றன்னுவே. (௭௧)

குறிறுமெல்லொற்றுமவ்வினத்திடையினத், துயிர்மெய்நீட்சியுமவற்றோடொற்றுஞ், சேரினுந்தன்னுவென்பதுதிறமே. ()

அன்றுவென்பதுமன்வாவென்பது, முன்றோனென்பதுமன்றோனென்பதும், பொன்வேலென்பதுந் தன்வானென்பதுந், தன்றச்சந்தத்துதாரணமாமே. (௭௩)

தய்யச்சந்தம்.

குறிலோடிடையினத்தொற்றுமவ்வினத்தொடு, வல்லினத்துயிர்மெய்க் குறளிலொன்றுஞ், சாரிற்றய்யவென்றுரைப்பார் தக்கோர். (௭௪)

குறிலுடனிடையினமெய்யுமவ்வினத்தொடு, வல்லினத்துயிர்மெய்க்குறளிலொன்று, மிடையினமெல்லினத் தொற்றிலொலொன்றும், புணரினுந்தய்யவென்றுரைப்பார்புலவோர் ()

வள்ளியுஞ்செய்தியும்வள்ளலுஞ்செய்தலு,மெய்யனுஞ்செய்கனுந் தய்யச்சந்தத்,துதாரணமாமென் றுரைப்பதுமுறையே.

தய்யாச்சந்தம்.

குற்றெழுத்திடையினத் தொற்றவ்வினத்தொடு, வல்லினத்துயிர்மெய் நெடிலொன்றென்றிற், றய்யாவென்றே சாற்றிடத்தகுமே. (௭௭)

குறளோடிடையினத்தொற்றுமவ்வினத்தொடு, வல்லினத்துயிர்மெய்நீட்சியிலொன்று,மிடையினமெல்லினத் தொற்றினிலொன்றுந், தய்யாவென்றேசாற்றுவருணர்ந்தோர். (௭௮)

மெய்யேயென்பது நொய்தோவென்பதுந்,தள்ளாளென்பதுஞ் செய்தானென்பதும், வல்லோனென்பது மொல்கேனென்பதுந்,தய்யாச்சந்தத்துதாரணமாமே. (௭௯)

## பிறழ்ச்சியியல்பு.

குறிலுடனிடையினத்தொற்றுமெல்லினத், துயிர்மெய்யெழு
த்து மொன்றினுமஃதோ, டவற்றினொற் றனுகிற்றுயி
னுந், தன்னவுந்தய்யவும்பிறழுமன்றே. (௮௰)

அவற்றின் என்பதற்கு - அம்மெல்லின விடையினங்களுடைய -
எனப்பொருள் கொள்க.

பொய்மையென்பதும் வர்மமென்பது, மெய்ம்மெய்யென்ப
துந்தன்னவுந்தய்யவும், பிறழ்வதினுதாரண மென்பார்பெரி
யோர். (௮௧)

தய்ய தந்த தானவென்னுஞ் சந்தத்தில் - நெய்நிறைந்த நிபமென
வருவதும், தன்ன தய்ய தான வென்னுஞ் சந்தத்தில் என்னவர்ம
மீது எனவருவதும், தய்ய தந்த தாத்த என்னுஞ் சந்தத்தில் - மெய்
மெய்கொண்ட வார்த்தை எனவருவதுமாகிய விவைகடாமே அம்
மெல்லினங்கள் மிகுந்தொலிக்கும் போது நெய்ந்நிறைந்த நிபமெ
னத் - தன்ன தந்த தான வென்னுஞ் சந்தமாகவும், என்னவர்மம
மீது எனத் - தன்ன தன்ன தான வென்னுஞ் சந்தமாகவும், மெய்
ம்மெய்கொண்ட வார்த்தையெனத்-தன்ன தந்த தாத்த வென்னுஞ்
சந்தமாகவும் பிறழ்ந்து வந்தமை காண்க.

## மெலித்தலியல்பு.

தன்னவுந்தய்யவுஞ் சாற்றுஞ்சொற்களி, லொற்றின்பின்வரு
முயிர்மெய்வேறேற்,சந்திவேற்றுமையிற்றனவெனப்படுமே.

வேறேயென்றது-மெல்லினவொற்றிற் கவ்வருக்கமல்லாத மெல்
லின விடையினத்து, மிடையின வொற்றிற் கவ்வருக்கமல்லாத
மூவகையினத்துமுள்ளவைகளே.

இவற்றினுதாரணம்.

தனனதன தந்தனம் என்னுஞ் சந்தத்தில் - தொலைவில் சண்முக ங்களும் - எனத் - தன்னச்சந்த மாகிய - சண்மு - தனச்சந்தமாய் மெலிந்ததும், தந்ததன தந்ததன - என்னுஞ் சந்தத்தில் - எந்தமன் வில்வென்றியது - என - மன்வில் என்னுந் தன்னச்சந்தம் - தனச் சந்தமாய் மெலிந்ததும், இதுவன்றி, தனன தன தானனு வென் னுஞ் சந்தத்தில் - வயிறு தொய்வுறுநதோ - எனத் - தய்யச்சந்தமா கிய - தொய்வு - தனச்சந்தமாய் மெலிந்ததும், தன தன தன தன என்னுஞ் சந்தத்தில் - சொறு மெய்மையுனதேன - எனத் தய்யச் சந்தமாகிய - மெய்மை - தனச்சந்தமாய் மெலிந்ததும், தன்ன தன தத்த தன என்னுஞ் சந்தத்தில் - என்ன செய்கை யுற்றதென - எனத் தய்யச்சந்த மாகிய - செய்கை - தனச்சந்தமாய்மெலிந்ததுங் கண்டுகொள்க.

தொடர்ச்சியியல்பு.

சொற்களிற்குறினெடிலொன்றினுமஃதோ, டிடையினமெல் லினத்தொற்றொன்றடுப்பினு, மவற்றினுக்குரிய வண்ணத்திற் றினு, முறையேனகரக்குறினெடிலுறுமே. (அ௩)

தத்தச்சந்தத்தி னுதாரணமாகிய - பத்தி - என்னுஞ் சொல்லி னீற்றில் ஓர் குற்றெழுத்துப் புணர்ந்து - பத்திய - என வரினும் அதனீற்றில் - ஓர் மெல்லொற்றுப் புணர்ந்து பத்தியன் - என - வரி னும், அஃதின்றியோ ரிடையொற்றுப் புணர்ந்து பத்தியர் எனவரி னும் அத்தத்தச் சந்தமானது ஈற்றிலோர் னகரக்குறிலையுற்றுத்-தத்த னவென்னுஞ் சந்தமாகும் இங்ஙன மன்றி பத்தியா - பத்தியார் - பத்தியான் எனவரின் தத்தனு வென்னுஞ் சந்தமாகும் - மற்றவற் றிற்கு மிம்முறையே கொள்க.

## மதிப்பியல்பு.

மூவினத்தெழுத்தினுமுழுமையைக்குறிக்குஞ், சந்திகடோ ழுந்தணவுவதணந்து, சேர்ப்பவைசேர்ப்பதுசிறந்தோர் வழ க்கே. (அச)

முழுமையைக் குறிக்கு மென்றது - இன்ன வினத்திலின்ன வெ ழுத்தென் றெடுத்துக் கூறாது வல்லினம் - மெல்லினம் - இடையின மெனப் பொதுப்படக் கூறியிருத்தலே.

சந்தி என்பது எழுத்துக்களின் புணர்ச்சிவிதி.

## புணர்ச்சியியல்பு.

சில்வகைச்சந்தப்புணர்ப்போர்துள்ளலே. (அரு)

பல்வகைத்துள்ளற்புணர்ப்போர்குழிப்பே. (அசா)

குழிப்பொருமூன்று கூடியபின்னர், தொங்கற்றுழிசைத் துள்ளலொன்றிசைக்கிற், கலையொன்றுமெனக்கழறுவர்புல வோர். (அஎ)

எண்கலைப்புணர்ப்போர்வண்ணப்பாவே. (அஅ)

## சிறப்பியல்பு.

கலைதொறுமுற்பிற் குழிப்போர்மோனை, யுடைத்தாக்கூறுத லுத்தமர்வழக்கே. (அகூ)

இருகலையடியொன்றென்பதுமவற்றின்,மோனையொன்றுமொ ழிவருமொருநா, லெதுகைத்தாவதுமிருபகுப்பாதலும்,வண் ணப்பாவின்வழக்கெனத்தகுமே. (கூ0)

முந்தியபகுப்பின் கலையோர்நான்கிற், றலைவன்றன்புகழ்மூன் றிற்கூறிமற், றென்றிலன்னவன் வளநாட்டணிசொற், றேனையகலைநான்கிடத்தும்பல்வகைத், துறையிலொன்றைத் தொகைஎறக்கூறல், வண்ணப்பாவின்வழக்கெனத்தகுமே. (கூக)

## தழுஉமியல்பு.

தொங்கற்றூழிசைத் துள்ளலோரெட்டுந், துறையொடுபாவாத்துலங்காதாயினுந், தண்டமிழ்ப்புலவோர்தள்ளாரன்றே. ()

தமதுவேட்கையுந்தன்மையும்விரும்புந், தெய்வச்சிருஞ்செந்தமிழ்க்கழகாம், வண்ணப்பாவாவழங்கலுமுறையே. (கூஉ)

இது - திருப்புகழ்முதலிய பேரின்ப வண்ணத்திற் குரிய விதியெனக்கொள்க.

ஏனையபல்பா வினங்கடம்மையும், வண்ணத்துறையால்வழுத்தலுமியல்பே. (கூச)

## புலமையியல்பு.

வண்ணந்தேரார்வண்டமிழ்ப்பெருஞ்சீர், மருநூல்கல்லா மன்னர்கைக்கோலுஞ், சத்தியமில்லார்தவமும்போலுமே. (கூரு)

எவ்வகைப்புலமைத் திறலோரேனும், வண்ணங்கூறும்வலியொன்றிலரேற், கள்வரிற்கலங்குங்கருத்தினரே. (கூசா)

வண்ணச்செந்தமிழ் வளமையோர்ந்தோர், நால்வகைப்புலதர்தம்முளேரே. (கூஎ)

உடுவினத்தரசெனமதியைக்கூறலுங், கவியினத்தரசென வண்ணச்செந்தமிழதனைக்கூறலும்புனையுமன்றே. (கூஅ)

வண்ணப்பாவலர் வளர்புகழ்ப்பேற்றை, யன்னவர்தாமேயறி வர்மன்றே. (கூக)

பொறியோரைந்தும் புந்தியுளடங்கலி, னிவவகையிலக்கணம னைத்துஞ்செந்தமிழ், வண்ணச்சிருள்வயங்குமன்றே. (ள)

வண்ணத்தியல்புநூன்முற்றிற்று.

(*)

பெருந்தன்மை.

நேரிசைவெண்பா.

இந்நூற்பாநூற்று ளியம்பா தனமேலோர்
தந்நூ லுரைக்கிற் றணவாதே—யெந்நாளுங்
கொற்றவைவேற் செங்கைக்குருநாதன் றன்னருளே
சொற்றதெனத் தேர்ந்தவர் வாய்ச்சொல்.

வேலுமயிலுந்துணை.

முருகக்கடவுளே.

# திருவுருமாமலை வண்ணம்.



## கலவி மகிழ்தற் றுறை.

குழிப்பு.

தனனத்தன தானனதந்தன தய்யத்தாத் தானதத்தன
தனனத்தன தானனதந்தன தய்யத்தாத் தானதத்தன
தந்தத்தானனதன தந்தத்தானனதன
தந்தத்தானனதன தானதனதான.

தொங்கல். தனனதன தனதான தந்தன.

கருணைக்கட லாகியசங்கரர் தில்லைக்கூத் தாடுமுத்தம
ரருகிற்சிவ காமசவுந்தரி சொல்லைக்கேட் டேநடப்பவர்
கஞ்சப்பூ வாவிழியை யம்பொற்றூண் மீதனியு
நண்பற்கோ ராழியொடு காவலருளீசர்

விடையிற்றினமேவிவரும்பரர் தொல்லைப்பார்ப் பானடுத்தலை
கதறக்கவர் நீளநகந்திகழ் கைபற்றேட் டாலிரப்பவர்
வெம்பிப்போ ராடுநமன் மங்கிப்பாதாளமதின்
முங்கத்தா ளாலுதையும் வீறுடையநாதர்

கயிலைக்கிரி மீதுறைபுங்கவர் பல்லிற்றீக் காடிருப்பது
கருதிப்புர நீறமகிழ்ந்தவர் மெல்லப்பூப் போடுமற்றெழில்

கண்டப்போ தேமதனை வென்றிட்டோர் நால்வர்பகர்
செஞ்சொற்பா மாலையணி காரணவினோதர்
சரபமதாம் விறலாளர் தந்தசேய் (ஹ)

கலகச்சம ணாதியர்தங்களை வெல்லப்போய்ப் பாடும் வித்தக
னருளைக்கனியாமெனவந்துயர்கிள்ளைக்காத் தூணிலுற்றிரு
கண்பெற்றோர்காவலவ னிந்தப்பார் பேசுபுகழ்
துன்றப்பே ராடல்புரி கானமயிலாளன்
வினையைச்சுடுவார்மனமென்றுளிர்குல்லைத்தார்ச்சூடுமுச்சி
ய, னருமைத்தமிழ் போலுமணங்கமழ் கள்வற்றாக் கூதளத்
தொடு, வெண்மிச்சிர்நீபமலர் குன்றைப்போலே யிலகு
துங்கத்தோன் மீதுவடி வேலணியுமாதி
கழலிற்சுர வாரமணிந்தொரு கையிற்கூக்கூவெனத்தொனி
தருகுக்குட வாகைபுனைந்தவன் வல்விற்போர்ச்சூரினத்தவர்
கன்றப்பேய் நாய்நரிகள் மிஞ்சப்போராடிமகிழ்
துங்கத்தேர் வீரர்துணை காணரியசோதி
சபலமுளா ருணராத கந்தவேள் (வ)

இருமைப்பிணிமாறவிரைந்தருள்செய்கைக்கேற்றோனெமை
ப்பெறு, முருகப்பெரு மாளொருபைம்புனம் வெளவிப்போ
ய்க்கானவப்பிடி,யின்பத்தேனூறுமிதழுண்டெய்ப்பாறு
முன்றெரு, கொம்புக்கா ரானைவரு மேதுவுணர்சாமி
பவளக்கிரி யேநிகர்சுந்தர னெல்லைப்போற் றோனுநற்பணி
மிகைதுற்றகுமாரனலந்தவிர் கெர்வத்தோர்க்கேமனிற்றிகழ்

பண்புற்றோ ருயுகவி கொண்டப்பா லோரலகை
பொன்றக்கூர் வேலைவிடு பான்மையுளவீரன்
இலகத்தகு மாயிரமம்பக மொய்பொற்பாற்காமடற்கரி
யருள்பொற்பிடியாகுமிலஞ்சியமெய்நற்காப்போர்வினைத்தவ
னெண்டிக்கோர்குழுநவ கண்டத்தே நீடுபல
குன்றிற்போய் மீள்குரவ னீரிருகையாளி
சிரவணநூன் முழுதோத நின்றகோ (வஹ)

எழிலித்திர ளோடுகலந்துறும்வெள்ளைக்கொட்டானைசிற்சில
பிளிறப்பல கோடிகுரங்குக ளையத்தாற்பாயு மற்பொழி
லின்கட்சே ணுடரவர் தங்கட்கா மாதரொடு
கொஞ்சிச்சீராடுமெழி லேயுமுனிவோர்கள்
பனிவெற்புடை யாடருமைந்தனெ மல்லற்றீர்த்தாளுமெய்ப்
பொரு, ளெனமெச்சிடுமோதைமலிந்துயர்தெய்வச்சீர்க்கோ
வில்சூற்றினர், பஞ்சப்பேய் மாறியரு ளன்பிற்சேர்வீறு
மிளிர் சந்தப்பாவாணர்துதி பாடுவதுநீடும்
இகன்மிக்குள வேடுவரம்புக ளெய்கைக்காற்றூதபுட்குல
மறைதற்கர ணுவளருந்தினை மல்கிக்காற் றாருநற்புன
லென்றைக்கா லும்வருசெம்புப்பே ராறுதவு
கன்றைப்போ லேகுலவு மீடில்வளமேய
திருவுருமா மலைமேவு மங்கையாள் (௨)

அருணப்பிர காசமிலங்கிய வல்லிக்கோப் பானசித்திர
மதனக்குறி காணவனைந்துள தொய்யிற்சிற் றூர்புயத்தின

எண்டத்தூர் வாழுமவ ருண்மைக்கா மாரமுநின்
மென்சொற்சேர் வாயினவ ளாலநிகரான
விழியுற்றவளியாழ்பொரு முன்கையில் வெள்ளிக்காப்பாதியி
ட்டவள், முழுமைச்சசி போலுமுகந்தனின் முல்லைப்பூப்
பொனகைப்பவள், விந்தைக்காலாழியினள்பந்தைப்போ
லேகுலவு, கொங்கைக்கோ லாகலமு மேகலையுமேனி
அழகுக்கிடமாமெனநின்றவள் கள்ளப்பேச் சாலுருக்கிடும்
வினயக்குண சிலமிருந்தவள் மையற்கோட்டாலையைத்தரு
மஞ்சப்பே டேயனையள் வஞ்சத்திமுளுகிற
நெஞ்சத்தாள் வேளுமறி யாதவெகுகாமி
அரசிலைமேன்மன தேற முன்புபோய் (௨௩)
அகிலத்தினிவேறொருதஞ்சமு மில்லைப்பார்த்தாவியிப்பொழு
தடலைப்பிரி யாமலிரங்கடியொள்ளிக்காற் போர்விளைப்பவ
னம்புக்கூ ரான்மிகவும் வெம்பிப்போ னேனதொடு
தென்றற்றேர் மீதுருள லாலுமெலிவாகி
வெருளுற்றன வீரமுநெஃஞ்சினி லெள்ளுப்போற்றுனும்வை
த்திலே, யிதுபக்குவமானமடந்தையர் செவ்விக்கேற் காதுசற்
றிதழ், விண்டிட்டா யாகிலுயர் தந்தச்சிர்காணுமதி
லிந்தப்பாடாறியளி மீறுமடிபாவி
அணிநித்தில மாலையெனெஞ்சொடு புல்லச்சேர்த் தான்முலை
த்துணை, பொதுமிக்களி கூருநகங்கொடுகிள்ளிப்பார்த் தாலு

முத்தம, மன்றிப்பாழாவதிலை கும்பிட்டேனூறுதர
மந்தத்தே ரேறிவினை யாடவிசைவாகி
அருள்புரிவா யெனநா னெருங்கலால் (ஐ)
ஒருபொற்பிடி போலவசைந்தெதிர் தள்ளிப்போய்க்காதலற்
றவ, ளெனநிற்பது மாரன்விடுங்கணை பையத்தாக் காமைபற்
றிய, வுண்கட்சோர்வாயதுவு மஞ்சைப்போ னீடுகுழல்
சங்கத்தா லாயவனை யூறுதவிர்தானை
தளர்வுற்றதும் வாயுலர்கின்றதும்வில்லைப்போழ்காணுநெற்றி
யி, லறுகிற்பனி போலவரும்பலு மெய்மைச் சிட்டாமெனக்
கொடு, தங்கப்பா வாய்மதன னங்கச்சேனாதிபதி
யென்கைக்கா வாயினிது தாடியிதழூறல்
உனைவிட்டினி நானகல்கின்றில னென்ளிச்சீச் சியெனச்சொ
லின், மயன்முற்றிய போகரசங்கெடு முள்ளிப்பார்த் தானுவ
ப்புறு, மொஞ்சப்போ மோவெனலின்மங்கைக்கோவா
குமவள் கொஞ்சிக்கோ ணுமலெதி ரோதிடு நல்வேனை
இரதியினோ டெழில்வேளி ணங்கல்போல் (ஐஐ)
உவகைக்கடன் மூழ்கிநிமிர்ந்தவன் மெய்யைச் சேர்த்தேயி
றுக்கலொ, டிதழிற்சுவை தேறிமுகந்தபின்மல்லிட்டாற்போ
லெதிர்த்தினி, தொன்றுக்கோர் நூறுவித மன்பிற்சிரா
டியுயர், நந்திக்கோ னூன்முறையி லாடியிகழ்போது
சரணத்துணை மேல்விழவுஞ்சிறு செல்லக்கூத் தாகிவிட்டது
குறியிற்கர நாவளையும்பொழு தல்லிப்பூப் போல்விரித்தது

சண்டிக்கோ மாளியுனை யன்றிப்பார் மீதிலிலை
யென்றிட்டாளாமிதுமெய் தானடியெனுமல்
உலகத்துயர் மாமலரின்கணோர்மொய்யுற்றுற் போலணைத்த
ன, விருதிட்டமு நாடிமகிழ்ந்தனம் வெள்ளப்போக்காமத
ப்புன, லந்தக்கூ கூககவெ னென்புட்சீர் தோணியது
முந்திச்சோ ராதுசரி யோடியதநேரம்
இனிதுறுமோர் சுகமா ருணர்ந்ததே. (க)

—(*)—

தொங்கற்முழிசை.

சரபமதாம் விறலாளர் தந்தசேய்
சபலமுளா ருணராதகந்தவேள்
சிரவணநூன் முழுதோத நின்றகோ
திருவுருமா மலைமேவு மங்கையா
வரசிலைமேன்மனதேறமுன்புபோ
யருள்புரிவா யெனநா னெருங்கலா
விரதியினோ டெழில்வே ளிணங்கல்போ
லினிதுறுமோர் சுகமா ருணர்ந்ததே.

—(*)—

## குன்றுதோறாடல் வண்ணம்.



பாலனைப்பழித்தற்றுறை.

குறிப்பு.

தத்தனதன தந்தன தானன தத்தனதன தந்தன தானன
தானதானன தானதானன தானதானன - தன்னனதான.

தொங்கல். தானவ தானதத்த தானன.

சத்திவேல்புனை சுந்தர மார்பினன்
முக்கணாயகர் தந்தருள் பாலனென்
மோகநாயக னீதியேவடி வானதேசிக னுண்மைவிசாகன்
வெற்றிமீறிய தம்பியர் மாமய
லுற்றுவாடிட வஞ்சமு னுள்புரி
தாருகாசுர னீடிலாமலே யோடுதூள்பட மன்னியவீர
தத்துவாகர மென்றெளிர்சேவகன்
முத்தியீயுமு னென்மொழி லீபவன்
ஞானவாரிதி மோனதாரக மூலமாகிய சண்முகநாதன்
ஈராறு தோள்பொருக்கு மாதிவேள் (ஹு)
சர்ப்பமீது நடம்புரி தோகையை
மெச்சுவார்சன் மனந்தனில்வாழ்பவ
னீறுபூசிட நாணியேசிய சாரணாதியர் தம்முயிர்மாள
முற்றுபாடல் விளம்பிய பாவல
னிட்டமானவுடம்பொடு தோணிடும்

விறுதோய்குரு வாஜபேயவன் வானுளார்பதி துன்னியவா
தப்பிடாதெழிலெந்தருநீழலி [ழ்வு
லுற்றவாதன மென்றநி லேறிய
சாமிபூமனேமோதியேதனே போமொனவ வண்மைவிஞேத
னேமாறி டாதளிக்கு மீகையான் (வ)
அத்திமாமுக வைங்கர ஞேடெதி
ரிட்டுவாது தினஞ்செயும் வாலிபன்
வேலெழூடொரு மாவதாகிய சூரஞர்முடி மண்ணுறவீசம்
ஒப்பில்சாயக மிஞ்சிய மாரத
னக்குமாலெபுனேந்தவர் தாயக [யன்
ஞழிரும்புவி வாழவேமலெ தோறுமாடல்கள் பண்ணியநே
அம்பர்வாசல் புகுந்தழ லாதருள்
வைத்துநேர்வரு கின்றகு ஞலயன் [ளன்
வேழமாதொடு வேடர்சேரியி னீடுபாவையை நண்ணுமஞ
ஆராதி யார்வருத்த நாடிடான் (வனு)
அச்சமாறிய திண்டிறல் வீரர்கள்
சுற்றுகோவிலு மிங்கித மாமயில்
கூடியாடிட நீடுசோலேயு மேனலூடுறு கன்னியர்வாய்கள்
இட்டவோசையு மஞ்சன மால்வரை
யொத்தயானேகள் பந்திக ளாவரு [புள்
ளிரும்வாவிக டோறும்வால்வளே பூவிலேறவு மின்னிசையார்

அக்கமாமணி சிந்திடமோதலின்
விட்டெலாவி முழங்கனு மாறுகள்
வானமாநதி நானவோடனு மாதியாம்வள மின்னமனேகம்
ஆனது வாழ்குறிச்சி யூரிலே (௭)
பத்தியால்விர தம்புரிவோர்களு
மிட்டதேவதை வந்ததுபோலெதி
ராடுவார்மொழி வாய்மைதானென நாடிவாடிய தன்மையு
மிக்கமூவரு மொன்றிய தோர்மரம் [ளாரும்
வைத்துநாகரு மங்குச பாசனு
மேவவேபணிவாரும்வாய்கொடுபூமிமீதுண வுண்ணுநரோடு
பற்றிலாரென வந்தவரிகிற
வெச்சிலானது முண்டுழல் வோர்களு
மாதியாகிய மாதர்பாலனுகாதுதேடுமு னென்வயிறாடு
பாராளு மாறுதித்த பாலனே (௨௰)
பச்சையானந ரம்புக ளாலிரு
குத்துமாமுலை யுஞ்சரி வாயின
வாடையான்மனம் வீசல்போயொரு வாறுநாறின பொன்னி
யெய்ப்புமீறிய தங்கசவேண்முதன் [கர்மேனி
மெச்சுகோல மழுங்கிய தாயிழை
பூடுதோள்வளை யாதிபூணவொ ணாதநாயின வின்னவெலா
பத்துமாதமெ னுந்தியி னீகுடி [மொர்
யுற்றபோதமு தும்பகை யானது

மாமியேசிட நாளுமேதுயில் சோகமாகியு மெண்ணியசேய்
பாவாணர் வாய்துதித்ததாதையார் (ஹ) [கொல்
சித்திமார்மனை சென்றன ராமவ
ரிட்டவேலைபு ரிந்தவர்பூவணை
மீதிலேவிளை யாடினுனென வோதினர்பல சொன்னசெய்மாறு
சற்றுவாடினு முன்சகி யாதவர்
நத்தினுறுமி ணங்குகி லாரெனை
டாதிநாளையி லாணையாயிர மோதினரிதுபுண்ணியமோசொ
செக்கர்வாநெடு திங்களுமாழியு [ல்
மிக்குவேனு முனைந்திடும் வேளையி [ன்மெய்
னியும்வாய்விட லாகுமோசனி யானபாவியு முன்னையொவா
சேராத கேள்வர்நட்ப ராவரோ (ஹவு)
செட்டிபோல விருந்தவர்வேசிய
ரொட்டமீவது கண்டனையேபல
பாலினிய மாதர்தோள்புணர் வாரும்வாழ்வுறு மிந்நிலமீது
கட்டுமீறு முடம்புள நாளுனை
யிட்டுவாடுவ துந்தெரி வாயொரு
காலநியவ ராசையான்மடி மீதிலேகொள நன்மொழிகோடி
செப்புவாயென நம்பினன் வேதிய
விட்டதோர்விதி யென்செயு மோவினி
வேறுதாரக மேதுநீயல தாகையாலொரு நன்னலமோது
தீராத காதல்வெப்ப மாறவே. (௧)

தொங்கற்குழிசை.

ஈராறு தோள்பொருக்கு மாநிவே
 ளேமாறி டாதளிக்கு மீகையா
ஞராதி யார்வருத்த நாடிடா
 னூறது வாழ்குறிச்சி யூரிலே
பாராளு மாறுதித்த பாலனே
 பாவாணர் வாய்துதித்த தாதையார்
சேராத கேள்வர்நட்ப ராவரோ
 தீராத காதல்வெப்ப மாறவே.



## திருச்செந்தூர்வண்ணம்.

நற்றாய்பிரங்கற்றுறை.

குழிப்பு.

தந்ததனத்தனனு - தன - தந்ததனத்தனனு - தன-
தந்தனுதன தந்தனுதன தந்தனுதன தந்தனுதன
தானதத்தன தானதத்தன தானதத்தன - தத்தனதாந்த.

தொங்கல் - தந்தனு தனதான தானனு.

வென்றிமழுப்படையார்-திரி-யம்பகவித்தகனுர்-நிக-
ழுழந்துமாமுக நம்பராலடி யின்கண்மேவிய முந்துதேசிகர்
 வால்வளைக்குழை காதிலிட்டவர்
 தாதிமித்திமி திந்திமி தாந்தெய்
என்றுதிருப்புலியூர்-நடு-நின்றுநடிப்பவரோர்-கரி- [யகர்
வந்தபோததை வென்றுதோலையு ரிந்துபோர்வைய ணிந்தநா

மோகினிக்கொடி மோகமுற்றிசை
வாகிடத்தரு பொற்பொடுதோன்றும்
விஞ்சைவிழுப்பொருளா-ருமை-பங்கிலிருப்பவர்மால்-விடை
கொண்டுவானிடை வந்துவேணவ ரங்களீபவ ரிந்துசேகரர்
காலனைக்கழ லாலுதைத்தடன்
மாரனைச்சுடு மத்தர்முனீன்ற
கந்தவே ளெனையாளு நாயனர் (ஹ)
வெம்புருணத்திகலோர்-பதி-யுங்கெடவிட்டிடும்வேல்-புனை-
ரங்கமார்பினர் செங்கண்மாலொடு வந்தபார்வதி கொங்கை
பால்குடித்தவர் கோடிவெற்பினின் [யால்வரு
மேவுபற்பல சித்தரும்வேண்ட
நின்றபுகழ்ச்சியினு-ரருள்-பொங்கும்விழித்தொகையார்-தின
நம்பியேதொழு மன்பர்நாடிய விந்தையாவும்வ ழங்குபான்
ரேனைச்சிறை யூடுவைத்துள [மையர்
பேயைவெற்பொடு செற்றுயர்வேந்தர்
வெண்பொடிமிக்கணிவோர்-பலர்-கும்பிடுநட்பகலார்-கலை-
மங்கைகேள்வன்மு னஞ்சமோதிய செங்கையாலுல கஞ்செ
வானவர்க்கர சாமருத்துவன் [ய்தாள்பவர்
வாழவைத்தவர் தொட்டிலில்வாய்ந்த
கஞ்சமா மலர்மீது மேவினர் (வ)
குன்றியும்வெட்கியசிர்-தரு-செந்தகரிற்பிரிவோர்-வெளி-
ருென்றுமானையில் வந்துதாரக மென்றபூரண மந்திராகர

மோனநிச்சய ஞானமுற்றுப
தேசம்வைத்தருள் சிற்பராய்ந்த
செந்தமிழுக்கெளியா-னொரு-பைங்கிளியைப்பிரியார்-குற-
நங்கைமேவியி ருந்தகாவினி லன்றுபோயுமி ரந்தவேதியர்
நீலமுற்றகை மாதுநித்தமும்
வாழிடத்தின ரக்கினிபோன்ற
குஞ்சியுடைத்தலைசேர்-கண-மிஞ்சுபடைக்குழுவார்-கதி-
ருந் தவேலவிடு கின்றசேவலி ருந்ததோளினர் வண்டுபாடிய
நீபநற்குர வாதியிட்டவிர்
தாள்படைத்தவர் நித்தியர்சேர்ந்த
திந்ததா வெனவாடு தோகையார் (வரு)
கொங்குமலர்ப்பொழிலோ-டுயர்-சந்தனவெற்பருகே-கடல்-
வந்துமோதிமு ழங்கிமாமணி சிந்துசீர்திக ழும்பொனுலய
வாயிலிற்பல பேர்திருப்புக
ழாதிசெப்பிடு நற்றொனியோங்கும்
உம்பர்நகர்க்கிடைபோ-யவர்-கண்டுவியப்புறவே-மிளிர்-
கம்பமாயிர நின்றமாடநெ ருங்கும்வீதியின் முன்றில்வாயுறு
சாலிடுக்கினில் வாவியிற்குலை
வாழையிற்பெரி தக்குகள்வீழ்ந்து
கொண்டன்மறைக்கவொணு - வுடு - வின்றிரளைப்பொருமே-
பெரு-கன்பராமிருதொண்டராதியில் வந்துகோபமோடம்பு

ராசியில், வேலைமுத்தமிழ் மாலையிற்சிறி
தோடுவிட்டவி த்தையுமோர்ந்த
செந்தின்மா நகர்வாழு மாதரே (௨)

நன்றினியெப்படி நா-னுடல்-கொண்டுவெளிப்படுவே-னடி-
யிந்தவூரிலெ னென்றகாரிய மந்தவூர்வனை மிஞ்சுமேயிதை
யார்மறைத்திட லாமிதற்குள
னைகர்செப்பிந கைப்பர்கைசேர்ந்து
பண்டொருமச்சினியார்-மல-டென்றதுமத்தையுமோர்-தின-
மென்றனைனொரு தொம்பைபோலவ ளர்ந்தையேயென வி
நாயகற்கிரு பாரியர்க்கிடை [ண்டகோபமு
வாழுமிச்சைமு னைத்ததுநீங்க
னைந்தியத்தருமே-முலை-யுஞ்சரிவுற்றபினே-விர-
நங்கள்கோடியி ருந்தகாலின வஞ்சியேயென வந்துதோணிய
பேதையிப்படி யோடிவிட்டதை
யாரிடத்திலு ைத்தழலாஞ்சொல்
எந்தமா ருயிரான தோழியே (உஹ)

நஞ்சுகுடித்திடலா-நர-கென்றதனிற்றருமா-மது-
சண்டதாரென வம்பின்மாயினு மிந்தவோலைசமுழுங்கிடாதவ
தூறுமுற்றிடு மேயிதற்கொரு
பாயமிப்பொழு திற்பகர்தேர்ந்து
கொஞ்சுமொழிக்கிளிபோன்-மக-ளன்றெருசிற்றிலிலே-மண
மென்றுபேசியி ருந்தசிளைாநி லைந்துவாடிய நெஞ்சமுடுப

கொனச்சுடு தேமதப்பயல்
வாளிதைக்குமு னிப்படிநேர்ந்த
நங்கொடுமைக்கிணையே-இது-வங்கிசவிர்த்தியதோ-வவ-
ளந்தநாளையில் வந்தநோயிலி றந்துபோயினு நன்றலோநடு
ராவினிற்றெரி யாதெழுப்பிய
பாதகப்பயல் சொற்படிபேர்ந்தும்
இந்தவோர் மகள்போக லாகுமோ (௩)
இன்றியசொற்களெலா-மவன்-வந்துசொலச்செயுநான்-மிகு
சொந்தமாமியர் மைந்தரோம்வரி வன்கைதாழ்வென நின்றபி
நானினைத்தினி யோனைநிச்சய [ரினை
மாமனத்தின் மதித்தனளிண்டு
நின்றமுதற்சகியா-தொரு-வெண்கலவட்டிலிலே-கொடு-
வந்துசோறொடு சுண்டுகிளொயு மிஞ்சவேயிட வுண்டதோர்கு
மாதுளத்துட னேகொடுத்திட [மு
லானமுச்சில்கி டக்குதுகாந்தி
இன்றுசெய்திட்டதுபோ-லுள-தங்கைவனை தொனியோ-டு
ளை-மிஞ்சியாடலிணங்குமோசையு டன்குலாவிடு மைந்துமு
வார்களச்சிய மானைதொட்டினி [னுரு
தாடுநற்றெழில் விட்டனள்சோம்பி
வெந்ததீ யவியாதபாலையே (௩௫)
என்றுநடப்பவளோ-வடி-பஞ்சிலுநுட்பமலோ-மக-
வென்றுதூரமி ருந்துவாறவர் நம்புமாறு நடந்தபாவியி

வாறுகைக்கொரு வானெனத்தெரி
யாதுசத்திய மற்றவள்வாழ்ந்த
ரும்பிகொதிக்குதையோ-மறு-தந்தமுனைக்கலையே-யதன்-
முன்புகாமாசஞ்சொனலும யங்குமோகைம ருந்துதான்மிக
வெறியிப்படி முளவைத்தது
வேதனிட்டவி திப்பொறிதான்பெண்
என்சொல்கடப்பவளா-வினி-யிங்குவரப்படுமோ-வவர்-
சென்றவூரிலு யர்ந்ததோர்குடி யென்றவாழ்வு பொருந்தியே
னுழமக்களு மாயுள்விர்த்தியு [பதி
மேவிடக்கரு திக்கொளல்பாங்கு
வெம்பிடா நலமேவவேணுமே. (௧)

—※—

தொங்கற்றுழிசை.

கந்தவே ளெனையாளு நாயனர்
கஞ்சமா மலர்மீது மேறினர்
இந்ததா வெனவாடு தோகையார்
செந்தின்மா நகர்வாழு மாநரே
யெந்தமா ருயிரான தோழியே
யிந்தவோர் மகள்போகலாகுமோ
வெந்தநீ யவியாத பாலையே
வெம்பிடா நலமேவ வேணுமே.

வண்ணம்முற்றிற்று.

—(※)—

பதினறுயிர்க்கழிநெடி லடியாசிரியவண்ண விருத்தம்.

குறிப்பு.

தய்ய-தான-தத்த-தாத்த-தாந்த-தந்த-தன்ன-தன
தய்யான.

செய்ய ரூது விட்ட பூக்க ளார்ந்த கஞ்ச மன்னு புனன்
மல்லோவா

நெல்லை யூரு மெச்சு பாட்டு வேந்தர் தங்கள் வண்மை யினை
யெள்ளாதோர்

செய்ய தானை பற்று மாக்க மேய்ந்த தொண்ட ருண்மை நிலை
கொள்வேனே

தில்லை வாழு மத்தர் கேட்ட தாஞ்சொ லொன்றை யின்னதெ
ன விள்வாயே

பைய ராவி ரித்த மூர்த்தி யீன்றபெண்கள் வன்ன முலை
புல்வாகா

பௌவ நீர்கு டித்த கீர்த்தி பூண்ட நம்ப னென்ன லனை
வெல்வேலா

சைய மாமு கத்த னுர்க்கு நேர்ந்த தம்பி யென்னவரும்
வல்வீரா

கள்வ ராம ரக்கர் வாழ்க்கை பேர்ந்த பின்பு விண்ணி லுறை
செவ்வேளே.

குருபாதமேகதி.

—(*)—

உ

முருகக்கடவுடுணை.

# திருப்புகழ்.

(*)

## குறிப்பு.

தனனதந்ததான தனனதந்ததான

  தனனதந்ததான தனனதந்ததான

தனனதன தானனு தானதந்த

  தனனதன தானனு தானதந்த

தானதானன தனதன தந்தன

  தானதானன தனதன தந்தன

தனனதானன தனதன தானன

  தனனதானன தனதன தானன

தனதனதந்தன தந்தன தானன

  தனதனதந்தன தந்தன தானன

தானனதனதன தானந்தந்தன

  தானனதனதன தானந் தந்தன

தனதனதனதன தனன தத்தன

  தனதனதனதன தனன தத்தன

தத்ததந்த தானனத் தானன

  தத்ததந்த தானனத் தானன

தனதனத்தான தனதன தந்தன

  தனதனத்தான தனதன தந்தன

தானதன தானன தாந்தன
  தானதன தானன தாந்தன
தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
  தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தானதாத்தன தத்தன தத்தன
  தானதாத்தன தத்தன தத்தன-தனதான.

கயிலைதங்கமேரு திருவைகுந்தமேமு
  கடல்கடந்தபூமி வளையநின்றதான
கதிரிரதவாழிதோ யோர்பிறங்க
  திசையினுமேமொடோர் நீடுகுன்று
காசிலாவொரு முனிமுது கென்பத
  னுன்முனுள்செயும் வயிரநெ டும்படை
கரமதுடொளிர் மகபதி யூர்முத
  லெவிடமாயினு நொடியிடை போய்வரு
கவனவுருண்டைசெ யுந்திற னுமது
  மிருவகையஞ்சன முஞ்செயும் விறேடு
காணரும்வெளியுரு வாயெங் குஞ்செலு
  மேன்மையதுமைவகை வாதங் கண்டிடு
கனமிகுபெருமையு முலகமுற்றுமுன்
  மகிழ்வுடனடிபணி வசியமொத்தம
கத்துவங்கொ ளேழுசித்தாமதொ
  டத்தையுஞ்செய் சிருமுற்றுவிரு

கனதனப்பாவை யரும்விடருங்கிழ
வுடல்கொளக்கோல்கொள் பவர்பருவங்கொடு
காமவெறி யெறியே மாந்திட
மான்வரவு காணலால் வேங்கைகள்
கலக்குறு மனத்தொடு நிலத்தினில் விழக்கரி
கரத்தடி படத்திறன் மிகுத்திடு மரித்திரள்
காலேநீட்டியு தைத்துயிர் விட்டிட
நீரின்மேற்குறடிட்டுநடக்கவெண்முகில்போலே(று)
ககனமென்றவாறு கொடுநடந்துமோது
கரியசிந்தினிா மிகவருந்தியிடில்
கவுரிநிற மாகிமே லேறிவந்து
மினலிடிகளோடுது நீர்பொழிந்து
காலிலாவொரு வுரகனை டுஞ்சுமை
யானபார்முழு வதிலு நிறைந்தொரு
கடுகுளேகிவெ ளியில்வரமாள்பவ
ருயிரினேடுற விலைவநிகராகிய
களவுறும் விந்தை யனந்தமு னீறுறு
மிலேயது கொண்டு தினஞ்செயும் வாழ்வொடு
காலுளிலசைசிவ யோகம் புன்பவ
நோய்தவிருயர்பர ஞானந் தந்திடு
கழலிணையுகசுக முதவுமுத்தியை
யணுகியவருமுற வினிதளித்திடு
கற்புமுன்றன் மேனினைப் பேதுமில்

சித்தமொன்று நீயளைச் சிரிய
கவிகொடுற்சாக மதனென வுங்கட
னடுவினிற்சேது செயுமரி யென்றும
காவலிகொ ளேமனர் நீங்கொடு
வேதமுனி யோய்விலா நீந்திடு
கனக்கறு பவத்துய ரினைத்தனு ணினைத்தயர்
கையைத்தளி வுளைத்துழல் வதைத்தளி மிதப்பருள்
காணம்வேற்படை யொத்த விழிச்சியர்
பூமிமேற்செல்விருப்பையொழித்துனைமறவாதே(வ)
மயிலைகஞ்சிபோரி யருணைசெந்தில்வேள்வி
மலையிலஞ்சிகூடல் புதுவைகண்டிபேறை
மயிலமலைதேவனூர் காழிகந்த
புரிதிருநெல்வேலிவானூர்குடந்தை
மாறனூர்வட வொழுகை பரங்கிரி
சோலைமாமலை தணிகை பெருந்துறை
மலையமாமலை பழனிசி ராமலை
கழுகுமாமலை திருவுரு மாமலை
மறவனை வென்றிடு குன்றுயர் சேய்நகர்
குறுமலை முன்பதி னின்று குகாவென
மானில மகிழுருள் வேனுய்ந் தின்புறு
சீர்புணர்திருமலை வேதந் தொண்டுசெய்
மகிமைகொளுரகம னையபருப்பத
மிரசதமலைபொனின் மலை யிடைக்கழி

மற்கடங் குலாவுநற் சோலைகள்
சுற்றநின்ற தோகைவெற் பேரிடை
மருதுடைத்தான நகரம ருந்தவ
ரிருவர்புட்டேக மொடுவள ருங்கிரி
வான்முகடு தாவிமே னீண்டவி
ராலிமலை வாவிசூழ் வேங்கட
மயற்பிணி யறுத்திடு தவத்தில்வ லசித்தர்கள்
வசிக்கும்வ ளமுற்றபெ ருமூக்கன்ம லையொப்பறு
மானவாய்க்குடி யொத்த திருப்பதி
தோறும்வேட்கையொடுற்றுனெழிற்புகழ்பகர்சீரும்
வலியவந்துசேர வபயமூர்தனுவன் [(வஹு)
மருவுசிந்தையாளர் பெறவரங்களியும்
வரதமும்வை வேனுமால் யானையஞ்சு
மொருபடையு நீடுமோர் பாசமுஞ்செ
வானநேர்சிகை நிமிரநெ டுஞ்சிறை
மோதியோவிடு குருகும் வளைந்திடும்
வளையும்வாளொடு பலகையு நீடிய
சிலையுமீசுர னிரதமு னுள்கொடு
வருமலைகொண்டிடு சஞ்சிவி யால்வரு
மெவரு மெரிந்துவி ழும்படி யேவிய
வாளியும் வைரமு நாளுங்கும்பிடு
மேலவர் மிசைமிகு கோபங்கொண்டுபல்
வலிமிகுமலகைக டமை விடுத்திடு

கொடியவ ருடல்புகு முயிர் குடித்திடு
மற்பொருந்து முவிலைச் சூலமும்
வெட்சிகொன்றை நீபநறு கூதள
மகளிரைச்சேரு மரமலர் சண்பக
மனையபற்பூவு மருவுபு யங்களு
மார்புமுக மாறுமே லோங்கிய
வாறுமுடி யோடுதோய் பூண்களு
மனத்திடை நினைப்பவ ரிடத்தினி லடிக்கடி
வரத்தகு பதத்துணை யுமச்சுத னளித்திடு
மாதர்சேர்க்கையு முற்றும யிற்பரி
மீதுகாட்சிகொ டுத்தெளி யற்கருள் புரிவாயே (உ)

எயிலைவென்றவாயர் விதியைவென்றதோள
ரெமனைவென்றபாதர் மதனைவென்றபால
ரிலகுமழுவாளர்மா னேறிடங்கை
யுடையவர்வெண்மேனியா னேறுதுங்க
ரீசரோர்கொடி மருவிய பங்கினர்
தாருகாவன முனிவரர் மங்கைய
ரிடையின் மேகலை தளரவ ருளினி
லுடையி லாதுசெல் புனிதர்ம யேசுர
ரொழில்வளை தொங்கிய சைந்திடு காதினர்
பொடியை நிரம்பவ ணிந்தொளிர் மேலின
ரியாமையினதுமுது கோடும்பன்றியின்
வானிறவளையிரு கோடும்பைந்தரு

விளில்வள ராசர்க ருடலை லுப்பும்வெள்
மலர்மகள்கணவர்கள் சிரமு மைக்கள
மிட்டநன்பர் மாலி ரத்தாகுதி
யைக்கொளுங் கபாலர் புற்றேலலை
யிளர்கரித்தோலே யணிமுத லின்பர
ரலேபுனற்பாவை யுறைசடை கொண்டவ
ரியாருமுடி தாழுமோ ரண்டவர்
காளியுள நாணுமோர் தாண்டவ
ரியற்றமிழ் முதற்பக ருமுத்தமி முகத்திய
னெனச்சொன் முனியைப்புலி சமப்பட விடுத்தவ
ரியாகமாற்றிய தக்கனை யட்டிடும்
வீராத்தி கடுக்கை முடித்தவர் பணிதேவே (உஉ)

இமயமங்கையோர்க விஞனுடன் செலாயி
யிலறவிகஞ்சன் மாமி மயிடனெஞ்சி லாட
லிடுபதவிநோத மாகாளி கங்கை
திரிபுரா வராகி மாதேவி சிங்க
மேறும்விரிப கவதி குணலையை
மாரிகுரிக வுரிமக மாயிவை
யிலேகொள் சூலிய மலே சிவகாமியெ
வுலகுமீளிய வயிறுடை யாள்பரை
யெரிகதிர் சந்திர னம்பக மாவுறை
வதனியலங்கிரு தங்கொளு மேலின

ளேதமிலுருவின ளீசன் றங்கொரு
  பாகமுடைய சிவைவாசந் துன்றுத
யிலமிணர்புனை குழலினள் சமர்த்தியெ
  னதுபகைவரி னுயிர்பருகு சத்திமெ
யிற்சிறந்த மாதவத்தோர் புகழ்
  வெற்றிகொண்ட நீலி சத்தாதிக
ளெனவுநிற்பாளின் மொழிபகர் மென்கொடி
  விரலினுக்கோர்ப கவனை முனந்தரு
மீறில்சிவ யோக ஞானம்பிகை
  யானையுரு வாகினள் சாம்பவி
யெமப்பயல் முடித்தலை புடைத்திட விடித்தெனை
  யெடுத்தினி தணைத்துயர் மகிழ்ச்சியை யளிப்பவ
ளேசில் பார்ப்பதி கைக்க மலத்தொரு
  பாலனைத்தினமுற்றெளிரொப்பறுபெரியோனே(௧௬)

வெயிலைமிஞ்ச வீசு பரிதியொஞ்சு மாழி
  வெளிநிலங்குபார வளையெதிர்ந்து போர்செய்
விறலவுணர் சேனை மேன்மோது தண்ட
  மலர்மகள்க ணேரும் வாள்சாப மொன்றும்
வீரன்வேதனை யுதவிய புங்கவன்
  மாயன்மாதவனருள் பெருகுங்கடல்
விபுதர்வாழ்வுற வமுதமு னள்பகிர்
  பகவனேர்கரி யரசுகரா மிகும்

விரைவில் விழுங்க வருந்திமுன் மூலமெ
  னுரைசொல வந்த முகுந்தனி ராவணன்
மீதொரு கணையினை யேவுந் திண்புயன்
  வாசுகிமிசை துயில் கூருஞ் செங்கணன்
விடவரவதின் முடிதனி னடித்திடு
  கரியவன் மலைகொடு மழை தடுத்தவன்
மெய்த்தவங்கொள் கோசி கற்காவொரு
  துட்டமுன்டை யான வத்தாடகை
மிசைதனிக்கோலை விடுசிறுவன் கொடு
  மிரணியப்பாத கனைவதைகண்டவன்
வேளையருடாதை நாயேன் பிழை
  யாவுநல மாயெனோர் பாங்கினன்
விணிப்பரி திமுற்செறு மொருத்தன்மு டியிற்புனை
  விரைக்கம லமொத்திடு பதத்தின னெமைப்பெறும்
வேழம்வேட்டு வனற்பில் வளர்த்தமி
  னர்கள் வாழ்க்கையை மெச்சு தகப்பன்முன் மொ
[ழிசிலா (௧௪)
விகடகும்பதால பவளவந்த கோப
  விசறிரண்டு காத முறிவிலங்கு கோட
விகசிதசலாப மாமோக வென்று
  துதிசெயொரு யாது மாமேரு வின்கண்
மேவவாதியில் விடுகரன் வெங்கய
  மாமுகாசுர னுயிரினை யுண்டவன்

மிளிர்கபோலவ லவைபிரி யாவொரு
பிரமசாரிக ணபதி விநாயகன்
விழைவுறுதம்பி யெனும்படி மேவிய
குருபரகந்தவ கந்தையு ளார்குல
வேர்களை குணதர கிரன் றன்படை
யாறுமருணகிரி யோதுஞ் செஞ்சொலின்
வியன்மிகுதமிழ்கொடு பகர்திருப்புகழ்
பலவுமணியுமவி ரழகுபெற்றுயர்
மிக்கதிண் புயாசலத் தேயென
தற்பவெண் சொலானதைச் சூடிடும்
விதரணத்தேவ கமல மலர்ந்திடு
சரவணத்தாரன் மகளிர் மகிழ்ந்திட
வேதமொழி வாயிலே சூம்பிய
காலின் விரலோடனுள் வாழ்ந்தவ
வினைத்தொகை யிரட்டையு மறுத்திட நினைப்பவர்
விழிக்குளு மனத்துளு நிதத்தினி லிருப்பவ
வேலைகூப்பிட லொத்தரு மைத்தவ
ரோதைதோற்றிய சிற்சபையுற்றிடு முருகோனே(க)

தனனதந்தந் தனனதந்தந் தனனதந்தந் தானந்தந்
தனனதந்தந் தனனதந்தந் தனனதந்தந் தானந்தந்
தனனதந்தந் தனனதந்தந் தனனதந்தந் தானந்தந்-தனதான

பொருள்விரும்புந் துயர்மலிந்துன்
றனைமறந்திங் கூறொங்குந்

நினமலிந்தன் பனாயிகழ்ந்துங்
கயவர்பின்சென் றேவம்பும்
புகலுமென்புன் கவிதையின்பங்
கருதிவந்தின் ஞேர்சந்தஞ் சொலலாரோ

புலவனென்றும் பெயர்மொழிந்துந்
திகழுமுன்றன் சீர்விண்டும்
பிரமனன்றென் றலையிடங்கொண்
டெழுதும்வஞ்சம் போயன்பும்
புகழுமிஞ்சுந் தவமுநன்றென்
பனவொருங்குஞ் சேர்துங்கந் தழையாதோ

ஒருநரஞ்செம் புநதியின்கண்
பகர்தல்வம்பென் றுலந்தண்
குவடுதுன்றுங் கிரியிடஞ்சென்
றுருளுமன்றங் காஞம்பண்
புனதெனுஞ்சொந் தமுமிழுந்தெங்
கணும்விளங்கும் பீடுங்குன் றிவிடாதோ

உலகமெங்கும் பறையறைந்துன்
பழையதொண்டன் றுனென்றுஞ்
சமரசந்துன் மினர் பதந்தந்
திடவிழுஞ்செந் தாள்கொண்டங்
குறுநிகண்டுய்ந் தனமிதென்றுஞ்
சரதமென்றும் பாடும்பண் பிழையாமோ

குருபரன்சங் கரன்மகன்செந்
தகர்விடுஞ் சிங்காரன்பைந்
தமிழ்விரும்புங் குமரனண்டர்
தனிநெருங்குஞ் சூதந்தன்
குருதிசிந்தும் படிவிழுந்துங்
கெடவெலுஞ்செஞ் சேயென்கின் றவர்வாழ்வே

குவலயந்தின் றமிழ்முகுந்தன்
கடலிடந்துஞ் சார்வன்றன்
பிறகுவந்தைங் கரனைமுன்றந்
திடுபசுங்கொம் பாகும்பெண்
கொடியிளங்கொங் கைகளருந்துங்
குமுதமென்றுந் தோணுஞ்செங் கனிவாயர்

பருமையும்பொன் பொலிசுணங்கும்
பெறுதனங்கொண் டான்முன்சென்
றிருகரங்கும் பிடவணங்குங்
கிழவனென்கின்றார் நெஞ்சின்
பயமொழிந்தின் புறவழங்குஞ்
சிறுவகுன்றந் தோறுஞ்சென் றளிகூர்வாய்

பரவுதொண்டொன் றினர்மனங்கண்
டுதவிடுஞ்சந் தோடங்கொண்
டடவிடும்பன் பொருமுரண்டுன்
றினையுந்தந் தால்வென்றும்

பழனியங்குன் றினிலொர்தண்டுங்
 கொடுநலங்குஞ் சிர்தங்கும் பெருமாளே (உ)

 தந்ததந்ததந்ததந்ததந்ததந்ததந்த
 தந்ததந்ததந்தந்த தனதான

கொங்கிசைந்த வண்டுகிண்டு
 கின்றகொந்தணிந் தலர்ந்த
 கொண்டைகொண்டவின்சொன்மங்கை யனைநாளுங்

கொஞ்சியன் புடன்புணர்ந்து
 நெஞ்சமுந் திறன்பொருந்து
 குன்றினின்றிலங்குடம்பு மெலிவாகி

வங்குபுண் கிரந்திவெஞ்சு
 ரஞ்சிரங்கு மிஞ்சிநைந்து
 மங்கியங்கி யின்கண்வெந்து தொலையாதே

மங்களம் பெறுங்கவின்ச
 தங்கைதண்டை கிண்கிணென்க
 வந்துகஞ்ச மென்பதங்க டருவாயே

செங்கடம்பு பொன்பொலிந்த
 கொன்றைதண் பிருந்தையம்பு
 செஞ்சுகம்புனைந்துயர்ந்த புயவேளே

சென்றுமுன் றினைந்திரைந்த
 கன்றவம் பரம்புகுந்த
 திண்டிமிண்டிவஞ்சனஞ்ச விடும்வேலா

சங்கமென்பு மன்டைதிங்கள்
 கங்கைகொம்பு தங்குமங்கர்
 தந்தவந்திரண்டுவந்த வொருபாலா

தஞ்சமென்று நம்பியெம்ப
 ருங்குனிர் திறைஞ்சுகின்ற
 தங்கவம்பலங்கொளெங்கண் முருகோனே (ங)

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
 தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
 தத்தத் தத்தத் தத்தத் தத்தத் தனதான

அத்திக்குக்கட் கத்துக்குச்சத்
 திக்குக்கைக்குப் புட்பத்துக்கொப்
 பற்றுப்பொற் புற்றுச்சுற்றக்கக் கொடியானை

யர்ச்சித்திக்கற் கெய்த்தத்தத்துக்
 கிச்சித்தெட்டுத் திக்கிம்புக்குற்
 றத்தைப்பெற்றுச் சுற்றத்துக்கிட் டழிவேனே

பத்திக்குட்பட்டுச் சித்தத்தைச்
 சுத்தத்துட்டுற்றிச் சித்தைக்கைப்
 பற்றிச்சொற்கத்துக்குக் குற்றத் தினையோது

பத்தத்துச் சிட்டர்க்குட் டர்க்கச்
 சொற்கெட்டுற்றிக்கிற் சொற்சொற்றுப்
 பற்றற்றுக்கைப்பற் றச்சற்றிற் பெறுவேனே

துத்திச்சர்ப்பக்குப்புக் கச்சத்
துக்கத்தைக்கம் பித்துக்கொத்தித்
துய்த்துக்கொர்ச்சிக் கைச்சிக்கப்பொற் சிகிவீரா
துத்துத்துத்துட் டுட்டுட்டுட்டொக்
கச்சத்திக்கத் திக்திக்கொட்டைத்
தொட்டுக்கத்திக்கொட்டற்கிச்சிப் பவர்பாலா
எத்திற்றுப்பைக் கற்பைப் பற்றிப்
பத்தர்க்குத்துய்ப் பிட்டுத் துய்க்கைக்
கெய்ப்பற்றிட்டிச்சிக் கப்பெற்றிட்டவர் சேயூ
ரிற்செக்கர்க் கொத்துற்றத் திக்குப்
பச்சைப்பொற்புச் சத்திக்குச்சொக்
கிட்டற்பர்க்கிட்டத்தைத்துற்றத் திறல்வேளே (௪)
தனத்தத்தந் தனத்தானன தனத்தத்தந் தனத்தானன
தனத்தத்தந் தனத்தானன தனதானா
தமிழ்ச்சொற்கொண் டுனக்கேகவி
தொடுக்கச்சந் தனப்பூண்முலை
தனிற்சிக்குங்கருத்தானது; முகிழ்ப்பூநேர்
தகைப்பொற்கிண்கிணித் தாள்கொளுன்
வனப்பிற்சென் றுறத்தேமலர்
நனைக்கைக்கொண் டெதிர்த்தேயமர் பொரும்வேளை
யமிழ்த்தித்தின் பகட்டேமனை
விரட்டிக்கொண் டலைப்போலினி
தளித்துப்பந் தமற்றேருட னுறவாடி

யசுர்நத்தின் கனிற்காதுன
  தெழுத்தைச்சிந் தையுட்கூறிமு
  னடுத்துக்கும்பி டச்சிரரு டருவாயே
குமிழ்ப்புட் பந்தனைச் சேயகு
  முநப்புட்பந் தனைக்காமுகர்
  கொலைப்புட் பங்களைத் தோய்மனா மலர்சேரோர்
கொடிக்கொக்குங் குறப்பா வைத
  னிடத்திற் சென்றினைத்தே னிது
  குறித்துக் கிஞ்சுகப்பேடென மொழிபேசிச்
சிமிழ்க்குப்பந் நினுக்காடக
  மலைக்குத்துன் பமிட்டேவளர்
  சிவப்புக் குங்குமச் சேறணி முலையோடே
சிரித்துக்கொஞ் சியெற்சேரென
  வுரைத்துக் கெஞ்சமுற் போய்வரு
  திருச்சிற் றம்பலத் தேவளர் முருகோனே (ரு)
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
  தத்ததன தத்ததன தனதான
உட்டுறவு முற்றுனது பத்தனா யடுத்தெதுவு
  மொப்பில்களி பெற்றுனரு ளடையாதே
உக்கிர மதக்களி றதைப்பொரு முலைச்சியர்க
  ளுக்குருகி நித்தமன மெலிவேனோ
கட்டழ குடைக்குற மினைச்சுரர் மினைக்கொடும
  கத்துவ மயிற்பரியின் மிசையேறிக்

கைக்கனியெனத்திகழ் படைப்பொலிவொடிப்பொழுது
கற்பகம தொத்தெனெதிர் வருவாயே
குட்டி யயனைச் சிறையி லிட்டவன் முதற்றொழில்செய்
கொட்டுசிறு கைக்கமல முடையானே
கொச்சை யிடையற்கரசெனச் சென்ன முற்றுவரு
குற்றமறு மச்சுதனன் மருகோனே
செட்டிகள் குலத்தினிலுதித்திறை மொழிக்குரை செய்
சிற்பர வெமைச்சிறிது முனியானே
செப்பரிய தக்க மிடுபுத்தரை யடைக்கு சிவ
சிற்சபையி லுற்றுவளர் முருகோனே (௬)

திருப்புகழ்—முற்றிற்று.

---

# தெய்வமே துணை.

---

## அறிவிப்பு.

இப்புத்தகம் வேண்டியவர்கள் திருநெல்வேலி வடக்கனவரத நானத்தெருவில் ம-ா-ா-ஸ்ரீ, தி - செ - சித்திரபுத்திரபிள்ளை யவர்களிடத்திலும், சென்னையில் அச்சிட்டுக்கொண்டவரிடத்திலும் புத்தகம் ௧-ஐ விலை ரூபாய் வஹு - ஆகப்பெற்றுக் கொள்ளலாம்.